கடவுள்துணை.

# மநுதரும சாஸ்திரம்.

இஃது
வடமொழியிலிருப்பதால் ஸம்ஸ்கிருதபாஷையில்
வல்லவர்களாகிய சிலர்க்கேயன்றி மற்றையோர்க்கு
உபயோகப்படாமையால்
யாவருக்குமுபயோகமாகும்பொருட்டு
திருவைந்திரபுரம் - சோமாண்டூர் - இளையவில்லி

## இராமாநுஜாசாரியரை

புதுவை.

## நா - முத்துசங்கசெட்டியார்

கேட்டுக்கொண்டபடி
அவர் தமிழில் மொழிபெயர்த்து வசநரூபமாகச்செய்த தருமநூலை
ஷை யார் சகோதரராகிய

## முத்துக்கோவிந்தசெட்டியார்

## பு - க - சுப்பராயமுதலியாரால்

…பத்திருத்துவித்த சுத்த பிரதிக்கிணங்க
சென்னை
ஸ்ரீ பத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.



1907.

G. R. C. PRESS, MADRAS.

சுபமஸ்து.

# சாற்றுக்கவி.

---

శ్లో॥ యోసౌ కౌశిక బాలధన్వికుల భూ రామానుజార్యస్సుధీ ।
స్తైనద్రావిడ భాషయార్థవివృతిః స్మృత్యామనోర్యా౽రచి ।
యో౽వాసౌ వకుళప్రసాధనకృత శ్రీసోమయాజ్యన్వయో ।
వేదాంతార్య సుధీరముష్య సుమనా భాతిప్రశస్తార్థగా ॥

இதன்பொருள் இளையவில்லி கௌசிக இராமாநுஜாசாரியரென்
வம் பண்டிதரால் தமிழில் வசநரூபமாக மொழிபெயர்க்கப்பட்ட ம
 தருமநூலை வகுளாபரணம், ஸோமயாஜி வேதாந்தாசாரியரென்னு
 பண்டிதனுகிய யான் பார்வையிட்டதில் மிகவும் சிறந்ததாயும் மூல
மிருதிக்குச் சரியான பொருளுள்ளதாயும் இருக்கின்றது.

இப்படிக்கு புதுவை சமாதாநநீதியில் தருமசாஸ்திராலோசனை
மம்பராகிய.

☞ வே. வேதாந்தாசாரியர்.

# கடவுள்வாழ்த்து.



நகணைந்தொழிலுமோவாதாடல்செய்தருள்வோன்றன்கோ
நகமென்மலர்த்தாளுள்ளங்கருதிநால்வருணத்தோர்க்கு
நமுறுசுகப்பெற்றோங்கமன்னவர்மகிழ்ச்சிதூங்க
நுமிருதியைவிரித்துவசனமாச்செய்தூநன்றே.



# சிறப்புப்பாயிரம்.



சொல்லுலகுதருமநன்குணரமநுநுவன்மிருதி
துரிசில்வடமொழிநிகழ்தலாற்
றன்னுமப்பொருளெவர்க்குப்புலப்படுதலில்லை
துய்பதிராவிடமதிலதை

நல்லவுரைநடையினற்றருகவென்றியாவர்க்கு
நண்பினன்பொய்ம்மொழியிலான்
நவையில்கலையறிவினன்மிகுகொடையினன்புதுவை
நகர்வணிககுலசிரேட்டன்

வல்லநாகப்பனிறைவன்றவத்தினில்வந்த
வளர்முத்துரங்கபூபன்
வகுத்திடப்பெருமைபெறுவடமொழிச்சலநிதி
மதித்தமுதருந்தித்தேக்கும்

மல்லல்வயல்கோமாண்டூரிளையவில்லீபிரா
மாநுசாசாரியென்போன்
வண்டமிழின்மொழிபெயர்த்திடவதுதிருத்தினன்
வளர்சுப்பராயகவியே.

---

கடவுள்துணை.

# மநுதர்ம சாஸ்திரத்தின்

# அட்டவணை.

## நூலாரம்பம்.

——*——

சுபமஸ்து.

# பீடிகை.

---

இந்த்க்கிரந்தமானது வேதங்களால் கொண்டாடப்பட்டிருப்ப
ன்றி ஸ்மிருதி புராணங்களாலும், ఏకతో మునయస్సర్వే ఏకతో ము
బ్రవీత్ -என்றும். మనుస్మృతివిరుద్ధాయాసా స్మృతిర్నప్రశస్యతే என்

இதன்பொருள் பதினெட்டு ஸ்மிருதிகளுக்குள் மநுஸ்மிருதிக்
[illegible]ரோதமாய் மற்றபதினேழுஸ்மிருதிகளும் ஒரேவாக்காய்ச்சொல்
[illegible]ந்தாலும் அது ஒப்புக்கொள்ளத்தக்கதன்று. மநுஸ்மிருதிக்கு
[illegible]தமான ஸ்மிருதி புகழைபடையாது. என்றுஇவ்விதமாகக்கொ
[illegible]டப்பட்டு எல்லாப்பிரமாணத்துக்கும் சிரேஷ்டமா யிருப்பதா
[illegible]ளிவரு ஓதுகிறவர்களுக்கு அந்தந்தவிஷயத்தில் நேரிட்டசந்தேகம்
[illegible]ஷார்கிறதுமன்றி தருமார்த்தகாமமோக்ஷரூபமான நான்குவித
[illegible]பருஷார்த்தமும் உண்டாகிறதென்று அநேகம் மஹருஷிகளால்இத
[illegible]ஆகபரம வெளியிடப்பட்டிருக்கிறது. இதற்கு வியாக்கியானமாகிய
[illegible]காண்டு[illegible]டீயம்-கோவிந்தராஜீபம்மேதாதிதியம்இவைகளைவைத்து
[illegible]ாகவே அடிக்கடி நன்றாகயோசித்து அந்தவியாக்கியானங்களுக்குச்
[illegible]சத் மொழிபெயர்க்கப்பட்டது. இதைப்பொருமையாலேனும்
[illegible]ருதாலேனும், பரிசோதிக் கமநமுள்ளவர்களுக்குச் சுலபமாய்
[illegible]ந்தேகம் தெளியும்பொருட்டு அத்தியாயங்களுடையவும் சுலோ
[illegible]டையவும் இலக்கங்கள் போடப்பட்டிருக்கின்றன. ஆகையா
[illegible]ம்பாலும் சுலோகந்தோறும் வினை முடிந்திராததலால் முன்
[illegible]னும் பார்த்தால் விளங்கும்.



ஸ்ரீராமஜயம்.

# மநுதர்ம்மசாத்திரத்தில் பிருகுசங்கிதையில் முதலத்தியாயம்.

## நூலாரம்பம்.

பஞ்சவிடயங்களிற் செல்லாநின்ற மநதைப் பிரம்மநிஷ்டையிற் ...ல்லும்படி செலுத்திய சுவாயம்பு மநுவை ருஷீஸ்வரர்கள் வந் ...டந்து விதிப்படிப்பூசித்து மேற்சொல்லப்போகிற விஷயங்களைக் ...க்கிறார்கள்.

... பரிபூரணமான ஞாநம் பலம் ஐஸ்வரியம் வீரியம் சக்தி ... இவைகளை யியல்பாகவுடைய ஒப் சுவாமீ பிராமண க்ஷத்தி ...வசிய சூத்திரரென்கிற நான்கு வருணத்தாருடையவும் அநு ... பிரதிலோமன் அந்தராளன் விராத்தியன் முதலான சங்கர ...டையவும் சாதகர்ம்மமுதலிய தருமங்களை கிரமமாகச் சரி ...முறைமையும் எங்களுக்குச் சொல்லவேண்டும்.

... அக்கினிஷ்டோம முதலிய யாகாதிகர்மங்களை விதிக்கிறதா ...ருவராலே சிருஷ்டிக்கப்படாததாயும் இவ்வளவென்று அளவி ...கூடாததாயும் மீமாம்சா சாஸ்திரமறியாதவர்களாலே அறியப் ... பொருளையுடையதாயும் இருக்கிற இந்தச்சகலவேதத்தினுண் ...ய அறிந்தமஹான் நீரொருவரே யல்லவா.

௪. மஹாநுபாவாளான மஹருஷிகளுக்கும் சந்தேகந் தெளி ...த்தக்க ஞாநதேஜஸையுடைத்தான அந்த மநுப்பிரஜாபதி யான ... இவ்வண்ணமாக அந்தருஷிகளாலே கேழ்க்கப்பட்டு அவர்களைப் ...த்து கேழ்ப்பீராகவென்று சொல்லத்தொடங்கினர்.

ரு. வருணாசிரமதருமத்தைக்கேட்ட ருஷிகளுக்கு பிரளயகால ...ல் வருணாசிரமமுண்டானதால் முதல்பிரளயகாலத்தைச் சொல்

லத்தொடங்கினர். இந்தவுலகமானது பிரளயகாலத்தில் மூலப்பிரகிருதியில் ஐக்கியமாய் இருளில் மறைந்த பதார்த்தம்போல் கண்ணுக்குத் தோற்றாததாயும் அடையாளமில்லாததாயும் சப்த்தத்தாலறியப்படாததாயும் தர்க்கசாஸ்திரயுக்த்தியைக்கொண்டு நிச்சயிக்கத்தகாததாயும் யாவும் உறங்கினதுபோலும் இருந்தது.

சு. இவ்வாறு பிரளயகாலமுடிந்தபின்பு ஜீவாத்மாக்களைப்போல்கர்மத்தினாலேதேகமெடுக்காமல்தன்னிச்சையினாலே தேகமெடுக்கத்தக்க சுயம்புவானபகவானானவர் கண்முதலான புறவிந்திரியங்களாலே கிரகிக்கப்படாதவராயும் ஒருவராலுந் தடுக்கப்படாத சிருஷ்டிமுதலிய முத்தொழிலை யுடையவராயும் ஆகாயமுதலிய பஞ்ச மஹாபூதங்களைப் பிரகாசப்படுத்துகிறவராயும் பிரகிருதிப்பிரேரகராயும் பிரகாசித்தார்.

எ. சகலவேதபுராணங்களினாலேபிரசித்தராயும் மநதினாலேமாத்திரம் அறியத்தக்கவராயும் பிறவிந்திரியங்களாலே அறியத்தகாதவராயும் உருவமில்லாதவராயும் சர்வாந்திரியாமியாயும் இவ்வளவென்று சிந்திக்கத்தகாத மகிமையை யுடையவராயும் பிறப்பிறப்பில்லாதவராயும் இருக்கப்பட்ட யாதொரு சுவாமியுண்டோ அவரே இந்தஆகாயமுதலிய பூதங்களாகப் பிரகாசித்தார்.

அ. அந்தப்பரமாத்மாவானவர் சகலவுயிர்களுக்கும்இருப்பிடமானதன்சரீரத்தினின்றும் நானாவிதமான பிரசைகளைச் சிருஷ்டிக்க நினைத்து பிரம்மாண்ட சிருஷ்டிக்குமுன்னம் சலத்தையுண்டுபண்ணி அதில் தன்சக்திரூபமான ஒருவிதையைவிதைத்தார்.

கூ. அந்தவித்தானது சர்வேஸ்வரருடைய இச்சையினாலே ... கதிறமான ஒரு அண்டமாயிற்று அவ்வண்டத்தில் முன்ஜநநத்தில் பிரமப்பட்டத்துக்குத்தக்க தவசுபண்ணின ஒருஜீவனை பிரம்மாவாகச் சிருஷ்டித்து அவருக்கு அந்தரியாமியாய்ப்பிரவேசித்தார் அந்தப் பிரம்மனுக்கு சர்வலோகபிதாமகனென்றுபெயர்.

கம. ஜலமானது *நரன்என்கிற பெயரையுடைய பரமாத்மாவினால் சிருஷ்டிக்கப்பட்டதால் நாரமென்கிற பெயரையடைந்தது அந்த நாரமென்கிற பெயரையுடைய ஜலத்தில் வசித்ததினால் அந்தப்பரமாத்மாவுக்கு நாராயணனென்றுபெயர்.

---

* நரன் என்பது கேடில்லாதவன்.

கக. பிரபஞ்சத்துக்குக் காரணமாயும் சரீர மில்லாதவராயும் அழிவில்லாதவராயும் வேதாந்தத்தின லறியப்படுதலினலே சத்தென்றும் கண்முதலிய புறவிந்திரியங்களின லறியப்படாமையினல் அசத்தென்றும் சொல்லப்பட்ட சுபாவத்தையுடையவராயு மிருக்கிற அந்தப்பரமாத்துமாவினல் முன்னர் சிருஷ்டிக்கப்பட்ட ஒருஜீவனுக்குப் பிரம்மாவென்று பெயர்சொல்லப்படுகிறது.

கஉ. முன்சொன்ன அந்தவண்டத்தில் அந்தப்பிரம்மாவானவர் மேற்சொல்லும் கணக்கையுடைய ஒரு பிரம்மவருஷம் வசித்துத் தன் மநதினலேயே இந்தவண்டம் இரண்டாகப்போகும்படி நினைத்து அதை இரண்டுகண்டமாக்கினர்.

கரு. அவ்விரண்டுகண்டத்தினுள் மேற்கண்டத்தினலே சுவர்க்கத்தையும் கீழ்க்கண்டத்தினலே பூமியையும் நடுவில் ஆகாசத்தையும் எட்டுத்திக்குகளையும் சமுத்திரத்தையும் சிருஷ்டித்தார்.

---

## மகத்தத்துவ முதலியசிருஷ்டி.

கச. அந்தப்பிரம்மாவானவர் பரமாத்ம சுவரூபரான தன்னிடத்தில்நின்றும் வேதத்திற்சொல்லியிருப்பதினலும்ஞாநத்தையுண்டுபண்ணுகிறத்தினலும் சத்தென்றும் கண்ணுக்குத்தெரியாமையினல் அசத்தென்றுஞ் சொல்லப்பட்டமநதையுண்டுபண்ணினர். அதற்கு முன்னம் நானென்னும் அபிமானத்துக்கு இருப்பிடமாயும் தன்காரியஞ்செய்ய வல்லமையுடையதாயும் இருக்கிற அகங்காரத்தையுண்டு பண்ணினர்.

கரு. இந்த அகங்காரசிருஷ்டிக்குமுன்னமே மேற்சொன்னபரமாத்துமாவிடத்தினின்றும் மகத்தத்துவத்தையும் சத்துவமுதலிய குணங்களையும் சப்தமுதலிய பஞ்சவிடயங்களைக் கிரகிக்கத்தக்க பஞ்ச ஞானேந்திரியங்களையும் வேதத்திற்சொல்லியபடி கிரமமாக உண்டுபண்ணினர்.

கசா. முன்சொல்லிய ஆகாசாதி பஞ்சபூதங்களுடைய தன்மாத்திரைகளையும் அகங்காரத்தையும் சூட்சுமமாய் அதனதனிலேகளிலாக்கி மானுட விலங்கு பக்ஷிமுதலிய சாதிகளைச் சிருட்டித்தார்.

ஸ்ரீராமஜயம்.

## மநுதர்ம்மசாத்திரத்தில்

# பிருகுசங்கிதையில்

## முதலத்தியாயம்.

### நூலாரம்பம்.

பஞ்சவிடயங்களிற் செல்லாநின்ற மநதைப் பிரம்மநிஷ்டையிற் செல்லும்படி செலுத்திய சுவாயம்பு மநுவை ருஷீஸ்வரர்கள் வந்[டை]ந்து விதிப்படிப்பூசித்து மேற்சொல்லப்போகிற விஷயங்களைக் [கே]ழ்க்கிறார்கள்.

உ. பரிபூரணமான ஞாநம் பலம் ஐஸ்வரியம் வீரியம் சக்தி தஜசு இவைகளை யியல்பாகவுடைய ஓ சுவாமீ பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரனென்கிற நான்கு வருணத்தாருடையவும் அநு[லோ]மன் பிரதிலோமன் அந்தராளன் விராத்தியன் முதலான சங்கர[சாதி]களுடையவும் சாதகர்ம்மமுதலிய தருமங்களை கிரமமாகச் சரி[யாய்] முழுமையும் எங்களுக்குச் சொல்லவேண்டும்.

ந. அக்கினிஷ்டோமமு முதலிய யாகாதிகர்மங்களை விதிக்கிறதா[கி] ஒருவராலே சிருஷ்டிக்கப்படாததாயும் இவ்வளவென்று அளவி[டக்]கூடாததாயும் மீமாம்சா சாஸ்த்திரமறியாதவர்களாலே அறியப் [படாத] பொருளையுடையதாயும் இருக்கிற இந்தச்சகலவேதத்தினுண்[மையை]ய அறிந்தமஹான் நீரொருவரே யல்லவா.

ச. மஹாநுபாவாளான மஹருஷிகளுக்கும் சந்தேகந் தெளி[வி]க்கத்தக்க ஞாநதேஜசையுடைத்தான அந்த மநுப்பிரஜாபதி யான[வர்] இவ்வண்ணமாக அந்தருஷிகளாலே கேழ்க்கப்பட்டு அவர்களைப் [பூசி]த்து கேழ்ப்பீராகவென்று சொல்லத்தொடங்கினர்.

ரு. வருணாசிரமதருமத்தைக்கேட்ட ருஷிகளுக்கு பிரளயகால[த்தி]ல் வருணாசிரமமுண்டானதால் முதல்பிரளயகாலத்தைச் சொல்

லத்தொடங்கினர். இந்தவுலகமானது பிரளயகாலத்தில் மூலப்பிரகிருதி யில் ஐக்கியமாய் இருளில் மறைந்த பதார்த்தம்போல் கண்ணுக்குத் தோற்றாததாயும் அடையாளமில்லாததாயும் சப்தத்தாலறியப்படா ததாயும் தர்க்கசாஸ்திரயுக்தியைக்கொண்டு நிச்சயிக்கத்தகாதது யும் யாவும் உறங்கினதுபோலும் இருந்தது.

சு. இவ்வாறு பிரளயகாலமுடிந்தபின்பு ஜீவாத்மாக்களைப்போ ல்கர்மத்தினாலேதேகமெடுக்காமல்தன்னிச்சையினாலே தேகமெடுக்க தக்க சுயம்புவானபகவானனவர் கண்முதலான புறவிந்திரியங்கள லே கிரகிக்கப்படாதவராயும் ஒருவராலுந் தடுக்கப்படாத சிருஷ்டி தலிய முத்தொழிலை யுடையவராயும் ஆகாயமுதலிய பஞ்ச மஹா பூதங்களைப் பிரகாசப்படுத்துகிறவராயும் பிரகிருதிப்பிரேரகராயும் பிர காசித்தார்.

எ. சகலவேதபுராணங்களினாலேபிரசித்தராயும் மநதினாலேமா த்திரம் அறியத்தக்கவராயும் பிறவிந்திரியங்களாலே அறியத்தகாத ராயும் உருவமில்லாதவராயும் சர்வாந்திரியாமியாயும் இவ்வளவென்று சிந்திக்கத்தகாத மகிமையை யுடையவராயும் பிறப்பிறப்பில்லாதவரா யும் இருக்கப்பட்ட யாதொரு சுவாமியுண்டோ அவரே இந்தஆகாய முதலிய பூதங்களாகப் பிரகாசித்தார்.

அ. அந்தப்பரமாத்மாவானவர் சகலவுயிர்களுக்கும்இருப்பிட மானதன்சரீரத்தினின்றும் நானாவிதமான பிரசைகளைச் சிருஷ்டிக்க நினைத்து பிரம்மாண்ட சிருஷ்டிக்குமுன்னம் சலத்தையுண்டுபண்ணி அதில் தன்சக்திரூபமான ஒருவிதையைவிதைத்தார்.

கூ. அந்தவித்தானது சர்வேஸ்வரருடைய இச்சையினாலே கநிறமான ஒரு அண்டமாயிற்று அவ்வண்டத்தில் முன்ஜநநத் பிரமப்பட்டத்துக்குத்தக்க தவசுபண்ணின ஒருஜீவனை பிரம்மா சிருஷ்டித்து அவருக்கு அந்தரியாமியாய்ப்பிரவேசித்தார் அந்த மனுக்கு சர்வலோகபிதாமகனென்றுபெயர்.

க0 ஜலமானது *நரன்என்கிற பெயரையுடைய பரமாத்மா வால் சிருஷ்டிக்கப்பட்டதால் நாரமென்கிற பெயரையடைந்தது அ நாரமென்கிற பெயரையுடைய ஜலத்தில் வசித்தலினால் அந்தப்பர த்மாவுக்கு நாராயணனென்றுபெயர்.

* நரன் என்பது கேடில்லாதவன்.

கக. பிரபஞ்சத்துக்குக் காரணமாயும் சரீர மில்லாதவராயும் அழிவில்லாதவராயும் வேதாந்தத்தி னறிபப்படுதலினாலே சத்தென்றும் கண்முதலிய புறவிந்திரியங்களினா லறியப்படாமையினால் அசத்தென்றும் சொல்லப்பட்ட சுபாவத்தையுடையவராயு மிருக்கிற அந்தப்பரமாத்துமாவினால் முன்னர் சிருஷ்டிக்கப்பட்ட ஒருஜீவனுக்குப் பிரம்மாவென்று பெயர்சொல்லப்படுகிறது.

கஉ. முன்சொன்ன அந்தவண்டத்தில் அந்தப்பிரம்மாவானவர் மேற்சொல்லும் கணக்கையுடைய ஒருபிரம்மவருஷம் வசித்துத் தன் மநதினாலேயே இந்தவண்டம் இரண்டாகப்போகும்படி நினைத்து அதை இரண்டுகண்டமாக்கினார்.

கங. அவ்விரண்டுகண்டத்தினுள் மேற்கண்டத்தினாலே சுவர்க்கத்தையும் கீழ்க்கண்டத்தினாலே பூமியையும் நடுவில் ஆகாசத்தையும் எட்டுத்திக்குகளையும் சமுத்திரத்தையும் சிருஷ்டித்தார்.

---

# மகத்தத்துவ முதலியசிருஷ்டி.

கச அந்தப்பிரம்மாவானவர் பரமாத்ம சுவரூபரான தன்னிடத்தில்நின்றும் வேதத்திற்சொல்லியிருப்பதினாலும்ஞாநத்தையுண்டு பண்ணுகிறதினாலும் சத்தென்றும் கண்ணுக்குத்தெரியாமையினால் அசத்தென்றுஞ் சொல்லப்பட்டமநதையுண்டுபண்ணினார். அதற்கு முன்னம் நானென்னும் அபிமானத்துக்கு இருப்பிடமாயும் தன்காரியஞ்செய்ய வல்லமையுடையதாயும் இருக்கிற அகங்காரத்தையுண்டு பண்ணினார்.

கரு. இந்த அகங்காரசிருஷ்டிக்குமுன்னமே மேற்சொன்னபரமாத்[illegible]துமாவிடத்தினின்றும் மகத்தத்துவத்தையும் சத்துவமுதலிய முக்[illegible]குணங்களையும் சப்த்தமுதலிய பஞ்சவிடயங்களைக் கிரகிக்கத்தக்க [illegible]பஞ்ச ஞாநேந்திரியங்களையும் வேதத்திற்சொல்லியபடி கிரமமாக வு[illegible]டுபண்ணினார்.

கசு. முன்சொல்லிய ஆகாசாதி பஞ்சபூதங்களுடைய தன்மாத்தி[illegible]ரைகளையும் அகங்காரத்தையும் சூட்சுமமாய் அதனதனிலேகளிவ[illegible]த்கி மானுட விலங்கு பக்ஷிமுதலிய சாதிகளைச் சிருட்டித்தார்.

கஎ. யாதொருகாரணத்தினலே பிரம்மாவினலேயுண்டுபண்ணப்பட்ட பஞ்சமஹாபூதமும் அகங்காரமும் இந்தத்தேகத்தைச் சூட்சுமரூபமாயடைகிறதோ அதனலே இந்தத்தேகத்துக்குச் சரீரமென்று பெயராயிற்று.

கஅ. அந்தத்தேகத்தை ஆகாசாதிமஹாபூதங்களும் சூட்சுமரூபமாகத்தன்தன் காரியத்தோடு அடைகிறது ஆகாசாதிபூதங்களின் காரியம் மேலேசொல்லப்படுகின்றது மநதின்காரியமாவது சுபாசுபத்தைநினைப்பதினலே சுகதுக்கங்களையுண்டுபண்ணி கண்ணுக்குத்தோன்ருமல் அழிவற்றிருக்குகை.

கக. பஞ்சதன்மாத்திரை மகத்தத்துவம் அகங்காரம் இவ்வேழினுடைய சிருஷ்டிக்கிற வல்லமையாகிற தேஜசையுடைய சூட்சுமரூபங்களினலே பிறப்பிறப்பற்ற சுவாமியாகிற காரணத்தினின்றும் அழிவுள்ள இந்தலோகமாகிற காரியமுண்டாகின்றது.

உ0. இந்தப்பஞ்சமஹாபூதங்களில்முதலான ஆகாசத்தின்குணமானசப்தத்தை இரண்டாவதானவாயுவும் அதனது சப்தபரிசத்தைமூன்ருவதானதேயுவும் அதனதுசப்த பரிச ரூபங்களை நான்காவதான அப்புவும் அதனது சப்த்த பரிச ரூப ரசங்களை ஐந்தாவதானபிரிதிவியும் அடைகின்றது.

உக. அந்தப்பிரம்மாவானவர் முன்சிருஷ்டிக்கப்பட்ட மானுடர்முதலிய சகலசாதிகளுக்கும் வேதத்தில்நின்றும் இந்த அடையாளமுள்ளவன் மனிதனென்றும் இந்தஅடையாளமுள்ளது பசுவென்றும் இந்தஅடையாளமுள்ளது அசுவமெனறும் இவ்விதமாகப்பெயர்களையும் அந்தந்தச்சாதிகளின் றெழில்களையும் சிருஷ்டித்தார்.

உஉ. கர்மத்தைச்சுபாவமாகவுடைய இந்திராதிதேவர்களை...ரகச்
சூட்சுமரூபமுள்ள சாத்தியதேவர்களையும் அழிவற்றதான ய... பிர
ளையும் சராசரங்களையும் அந்தப்பிரபுவானவர் சிருஷ்ட்டித்தார்.

உ௩. யாகங்கள்நிறைவேறும்பொருட்டு இருக்குஎஜுஸ் ச...
ம் என்னும்பெயரையுடைய அநாதியானவேதத்தை அக்கினி வ...
சூரியன் இவர்கள்மூவரிடத்தினின்றும் வெளிப்படுத்தினர்.

உச. பின்பு காலத்தையும் காலத்திற்கு மாசாதிபிரிவையும்...
த்திகையாதி நட்சத்திரங்களையும் சூரியாதி நவக்கிரகங்களையும் ந...

ளையும் சமுத்திரங்களையும் பர்வதங்களையும் மேடு பள்ளவிடங்களை யும் உண்டுபண்ணினர்.

உரு. பிரஜாபத்தியமுதலிய தபசையும் வாக்கையும் கிரீடை யையும் சந்தோஷத்தையும் காமக் குரோதத்தையும் மேற்சொல்லப் போகிற சிருஷ்டியைச்செய்ய மநதுள்ளவராய் இந்தப்பிரசைகளின் விருத்தியின்பொருட்டு உண்டுபண்ணினர்.

உசா. கருமத்தையறிவதற்காக தர்ம்மா தர்ம்மங்களையும் அவற் றைச் செய்கிறவர்களுக்குப் பலனாக சுகதுக்கங் களையும் உண்டுப ண்ணினர்.

உஎ. முன்சொன்ன பஞ்சமஹாபூதங்களுடைய சூட்சுமரூப மான தன்மாத்திரைகளாலே தூலமாயும் சூட்சுமமாயுமிருக்கிற இவ் வுலகம் கிரமமாய்விர்த்தியடைகின்றது.

உஅ அந்தப்பிரபுவானவர் எந்தப்பிராணியை எந்தச்செய்கை யில் முன்னம் நியமித்தாரோ மறுபடியும் உண்டாகிற அவ்விதப்பிரா ணிகள் அவ்விதச்செய்கையை அடைகிறது

உகூ. கொலையை சிம்மாதி மிருகங்களுக்கும் கொலையின்மை யை மான்முதலிய மிருகங்களுக்கும் தயையை பிராமணருக்கும் கொ டுமையை க்ஷத்திரியாளுக்கும் குருபணிவிடைமுதலிய தருமத்தை பிரமச்சாரிகளுக்கும் அவர்களுக்கே மதுமாம்ச பக்ஷணமாகிய அதர்ம த்தையும் சத்தியத்தைப் பெரும்பாலும் தேவர்களுக்கும் அசத்தியத் தை மனிதர்களுக்கும் உண்டுபண்ணினர்.

௩0. வசந்தா திருதுக்கள் தன்றன்காலங்களில் தன்றன் அடை [illegible] யெப்படித்தானே யடைகின்றனவோ அதுபோலபிராணி [illegible] தன்றன் கர்மத்துக்குத்தக்க செய்கைகளைத் தாமே யடைகி [illegible].

௩க. உலகவிருத்தியின்பொருட்டு தன்னுடைய முகம் புஜம் [illegible] கால் இவைகளினின்றும் பிராமணன் க்ஷத்திரியன் வைசியன் [illegible]ரன் இவர்களைக் கிரமமாக வுண்டுபண்ணினர்.

௩உ. அந்தப்பிரம்மாவானவர் தன்னுடையதேகத்தை இரண்டு [illegible]மாக்கி ஒன்று ஸ்த்திரியாகவும் ஒன்றுபுருஷனாகவும் ஆகிஅந்த

ஸ்த்திரியி னிடத்தில் அந்தப்புருஷனாகிய தானே புணர்ந்து விராட் புருஷனை யுண்டுபண்ணினர்.

கூகூ. அந்தவிராட்புருஷனும் தவஞ்செய்து இந்தவுலகத்தை விசேஷமா சிருஷ்டிக்கும்பொருட்டு யாதொருவனை யுண்டுபண்ணினரோ அவன் நானென்றறியுங்கள்.

கூச. நானும் அநேகபிராணிகளைச்சிருட்டிக்க மநமுள்ளவனாய் யாவருஞ்செய்தற்கரிய தவத்தைச்செய்து பிராணிகளைச் சிருஷ்டிக்க வல்லமையுள்ள மேற்சொல்லப்போகிற பிரஜாபதிகளானபத்துமகரிஷிகளைச் சிருஷ்டித்தேன்.

கூரு. அவர்கள் மரீசி அத்திரி அங்கிரசு புலத்தியன் புலகன் கிரது பிரசேதசு வசிஷ்டன் பிருகு நாரதன் ஆகப்பதின்மர்கள்.

கூசா. மிகுந்தகாந்தியுள்ள இந்தப்பிரஜாபதிகள்வேறான ஏழுமநுக்களையும் தேவர்களையும் சுவர்க்காதிலோகங்களையும் காந்தருவர்களையும் தபசிகளான மஹாமுநிவர்களையும் உண்டுபண்ணினர்.

கூஎ. இந்தப்பிரஜாபதிகள் யக்ஷாள் வாசுகிமுதலிய நாகர்கள் அலகர்த்தன்முதலிபசர்ப்பங்கள் கருடன் முதலிய இராக்கதர் பைசாசர் அப்ஸரஸாள் அசுரர்கள் பக்ஷிகள் பிதுர்க்களின்பலவிதகூட்டங்கள்.

கூஅ. மின்னல் இடி மேகம் இந்திரதநுசு தூமகேது பூகம்ப முதலிய உற்பாதங்கள்

கூகூ. கின்னரர் வானராள் மீன்கள் பலபலசாதியான பக்ஷிகள் பசுக்கள் மிருகங்கள் மனிதர்கள் இரண்டுபக்கத்திலும் பற்களுள்ள புலிமுதலியவைகள்.

சo. புழு உலண்டுபூச்சி விளக்கணைப்பூச்சி எட்டுகாற்[illegible] முகடு வால்கொசு நாநாபேத விருக்ஷங்கள்.

சக. இந்தப்படி மேற்சொல்லிய பிரசாபதிகள் என்னுடைய ஆக்கினையால் தபஞ்செய்து பிராணிகளின் கருமத்துக்குத்தக்க தாபரசங்கம ஜநநத்தைச் சிருஷ்டித்தார்கள்.

சஉ. இந்தப்பிராணிகளுடைய உற்பத்திக்கிரமத்தையும் பின்செய்கையையும் உமக்குநான்சொல்லுகிறேன்.

## உர்ப்பத்திக்கிரமம்.

சரு. பசுக்கள் மிருகங்கள் இருபுறம்பல்லுள்ள புலிமுதலிய வைகள் இராக்கதர் பைசாசர் மனிதர் இவைகள் சராயுவென்னும் கருப்பப்பையில் ஜனித்து அதனோடுபிறக்கிறதுகள்.

சஎ. பலவிதபட்சிகளும் தண்ணீரிலுண்டாகிற முதலைகள் ஆமைகள் மச்சங்கள் இவைமுதலான செந்துக்களும் கரையிலுண்டாகிற ஓணான்முதலியவைகளும் முட்டையாலுண்டாகின்றன.

சடு. வால்கொசு எட்டுக்காற்பூச்சு ஈ மோட்டுப்பூச்சி இவைகள் புழுக்கத்தாலுண்டாகின்றன இதற்கொத்த புழு எறும்பு முதலியவைகள் உஷ்ணத்தாலுண்டாகின்றன.

சசு. விருட்சங்கள் வித்தினாலும் கிளைகளாலும் பூமியைப்பிளந்தூர்த்தமுகமாகவுண்டாகின்றன இந்தவிருட்சங்களின்பேதமான புடல முதலியசில கொடிகளும் பலநெல்லுமுதலிய பயிர்களும்பலன் கொடுத்தபின்பு அழிந்துபோகின்றன.

சஎ. பூவாமற்க[illegible]க்கிற அத்திமுதலிய சிலவிருட்சங்களுக்கு வனஸ்பதியென்று[illegible]ர் பூ[illegible]யுடைத்தானதுகளாகவும் பூவும்பலத்தையுமுடைத்தா[illegible]களாகவு[illegible] விருட்சங்கள் இரண்டுவிதமாக விருக்கின்றன.

சஅ. சில[illegible]டிகள் கொத்[illegible]க்கொத்தாயுண்டாகின்றன சிலசெடிகள் தூருக வு[illegible]டாகின்றன புற்கள் கோரைகள் கொடிகள் இவைகள் வித்தினாலும் கொடிகளாலு முண்டாகின்றன.

ச[illegible]. பாபகர்மத்துக்குக் காரணமாகிய அநேகரூபமுள்ளதமோகுணத்தினாலே சூழப்பட்ட இந்தத்தாவரசாதிகள் உள்ளறிவுள்ளதாய் சுகதுக்கங்களுடன் கூடியிருக்கின்றன.

ருo. பிரமவுற்பத்திமுதல் விருக்ஷவுற்பத்திவரையில்கோரமான [illegible]ரசக்கிரத்தின் உற்பத்திசொல்லப்பட்டன.

## தினப்பிரளயகாலமுணர்த்தல்.

ருக. அந்தப்பிரம்மாவானவர் இந்தப்பிரகாரம் இவ்வுலகமெல்[illegible]ற்றையும் என்னையுஞ் சிருஷ்டித்து தனதுபகல் முடிந்தவுடன்

இந்தவுலகத்தைப் பிரளயத்தோடு கூட்டித் தானும் அந்தரத்தானத்தையடைகிறுர்.

௫௨. அந்தப்பிரம்மாவானவர் எப்போதுபின்னும் இவ்வுலகத்தைச்சிருஷ்டிக்க மநமுள்ளவராகிறுரோ அப்போது இந்தவுலகமுண்டாகின்றது எப்போதுஅதனையழிக்க மநமுள்ளவராகிக் கண்ணுறங்குகிறுரோ அப்போதுஅழிகின்றது.

௫௩. அவர் கண்ணுறங்கும்போது கர்மத்தினுலே தேகமெடுத்திருக்கிற பிராணிகள் அந்தக்கர்மத்தினின்றும்விலகி ஸ்தூலதேகமில்லாதிருக்கிறுர்கள். மநதும் காரியமில்லாமலிருக்கின்றது.

## மகாப்பிரளயமுணர்த்தல்.

௫௪. இந்தப்படி பிரம்மாவின் வயதுமுடிந்த வுடன் சர்வாந்திரியாமியான பரமாத்துமாவினிடத்தில் பிரம்மாமுதலியசகலபிராணிகளும் ஆகாசாதிபூதங்களும் எப்போதுலயத்தை அடைகின்றனவோ அப்போது அந்தப்பரமாத்துமாவானவர் சகலபிராணிகளையும் சுகமாக உதரத்தில்வைத்துக்கொண்டு கண்ணுறங்குகிறவர்போலசுகத்தையடைந்திருக்கிறுர்.

## ஜீவோத்கிரமணம்.

௫௫. ஒருஜீவன் தமோகுணத்தினுல் சூழப்பட்டவனுய் பஞ்சேந்திரியத்தோடுகூடிய ஒருசரீரமெடுத்து நெடுங்காலமிருந்து எப்போது சுவாசப்பிரசுவாச முதலிய காரியங்களைச் செய்ய சக்தனுகவில்லையோ அப்போது ஸ்தூலதேகத்தைவிட்டு சூட்சுமரூபத்துள [illegible] வெளிப்படுகிறுன்.

[illegible] ச்சிக

## தேகாந்தரப்பிராப்த்தி.

௫௬. எப்போது அந்தச்சீவன் *புரியஷ்டகத் தோடுகூடி[illegible]டைய [illegible]ய் தாவரசங்கமபீஜத்தை அடைகிறுனே அப்போது அவனு[illegible]கபடி [illegible]தூலசரீரமுண்டாகின்றது.

---

* புரியஷ்டகமாவது பஞ்சமகாபூதம்-பஞ்சவிந்திரியம்-ம[illegible]வற் புத்தி-ஜந்மாந்தரவாசனை - கர்மம் - பிராணவாயு - அவித்தை-ஆ[illegible]

டுஎ. அந்தப்பிரம்மாவானவர் இந்தப்படி தன்விழித்தலினலே இந்தத்தாவரசங்கமத்தை யுண்டுபண்ணியும் உறங்குதலினலே அழித்தும் தானழிவில்லாமலேயிருக்கிறார்.

டுஅ. அந்தப்பிரம்மாவானவர் இந்தசாஸ்திரத்தை உண்டுபண்ணி விதிப்படி எனக்குமுன்னம் ஓதுவித்தார் யானும் மரீச்சிமுதலான ரிஷிகளுக்கு ஓதுவித்தேன்.

டுகூ. இந்தச்சாஸ்திரத்தை என்னிடத்தினின்றுநன்றுயோதியுணர்ந்த இந்தப்பிருகுமஹரிஷியுங்களுக்குமுழுதுஞ்சொல்லுவார்.

சுO. அதன்பின்பு மநுப்பிரஜாபதியினல் அந்தப்படிநியமிக்கப்பட்ட பிருகுமஹாமுநியானவர் அந்தரிஷிகளைப்பார்த்து கேளுங்களென்று சந்தோஷத்துடன் சொல்லத்தொடங்கினர்.

சுக. பிரம்மவம்சத்திற்பிறந்த இந்தமநுப்பிரசாபதியின் வம்சத்திற்பிறந்த மேற்சொல்லப்போகிற ஆறுமநுக்களும் தன்தன் அதிகாரகாலத்தில் மிகுந்த காந்தியுள்ளவர்களாய் பிராணிகளைச்சிருஷ்டிக்கிறார்கள்.

சுஉ. அந்தமநுக்களாவார் சுவாரோசிஷன் உத்தமன் தாமசன் ரைவதன் சாக்ஷுஷன் மிகுந்தகாந்தியுள்ள வைவசுவதன் ஆகிய விவர்களாகிறுவர்.

சுங. இந்தஅறுவரும் சுவாயம்புமநுவும் தன்தன் அதிகாரகாலத்தில் பிரசைகளையுண்டுபண்ணிக் காத்துவருகிறார்கள்.

## காலத்தின்கணக்கையுணர்த்துதல்.

சுச. இமை பதினெட்டுகொண்டது காஷ்டை காஷ்டை முப்பதுகொண்டது கலை கலைமுப்பதுகொண்டது முகூர்த்தம் முகூர்த்தம் முப்பதுகொண்டது ஓரிராப்பகல்.

சுரு. மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் சூரியன் இராப்பகல் பகுக்கிறுன் அதில்இரவு உறங்குகிறதற்கும் பகல் தொழில்செய்வதற்கும் பகுத்திருக்கின்றது.

சுசு. இராப்பகல் முப்பதுகொண்டதுமனிதர்களுக்கொருமாதம் அதில் பதினைந்துநாள் கிருஷ்ணபக்ஷம் பதினைந்துநாள் சுக்கி

லபக்ஷம் இந்த இரண்டுபக்ஷமுங்கூடிய ஒருமாதம் பிதுர்க்களுக்கு ஓரிராப்பகல் அதில் கிருஷ்ணபக்ஷம்பகல் சுக்கிலபக்ஷம்இரவு.

சுள. மனிதர்களின்பனிரண்டுமாதம்கூடிய ஒருவருஷம் தேவர்களுக்கு ஓரிராப்பகல் அதில் தைமாதம்முதல் ஆனிமாதம்வரையில் உத்தராயணமாகிய இவ்வாறுமாதங்களும் பகல் ஆடிமாதம்முதல் மார்கழிமாதவரையில் தக்ஷிணயனமாகிய இவ்வாறுமாதங்களும் இரவு இந்த இராப்பகல் முப்பதுகொண்டது ஒருமாதம் இதுபன்னிரண்டு கொண்டது ஒருவருஷம்.

சுஅ. பிரமனது இராப்பகலின்கணக்கை யறியும்பொருட்டு யுகங்களின்கணக்கைக் கிரமமாகச்சொல்லுகிறேன் கேளுங்கள்.

சுகூ. தேவவருஷம் நாலாயிரங்கொண்டது கிரதயுகம் அதற்கு ஷிவருஷம் நானூறுகொண்டது சந்தியென்றுசொல்லப்பட்ட விடியற்காலம் அப்படியே நானூறுகொண்டது சந்தியாம்சமென்று சொல்லப்பட்ட அஸ்த்தமனகாலம் ஆக நாலாயிரத்தெண்ணூறு தேவ வருஷம்.

எ0. மற்றமூன்றுயுகங்களில் விடியற்காலவருஷத்தி ... லாருநா றும் அஸ்த்தமனகாலவருஷத்தில் ஒருநூறும் யுகவருஷத்தி ... ல் ஆயிரமும் குறைந்துவருகின்றன அவையாவன திரேதாயுகவருஷம் ... ம் மூவாயிரத்தறுநூறு துவாபரயுகவருஷம் இரண்டாயிரத்து நானூ ... று கலி யுகவருஷம் ஆயிரத்திருநூறு.

எக. தேவவருஷத்தால் பன்னீராயிரவருஷகணக்குள்ள ... இந்த நாலுயுகமும் ஒருதரந்திரும்பினால் தேவர்களுக்கு ஒருயுகம்.

எஉ. தேவர்களின்யுகம் ஆயிரமானால் பிரமனுக்கு ஒ ... பகல் இரவும் அவ்வளவினையுடையதுதான்.

எங. ஆயிரந்தேவயுகக்கணக்குள்ள அந்தப்பிரமனுக்கு ... அந்தப் பகலை புண்ணிய ஹேதுவாகவும் அந்தக்கணக்குள்ள இரவை ... ச்சொப்பனகாலமாகவும் இராப்பகல் கணக்கறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

எச. அந்தப்பிரம்மாவானவர் அந்தஇரவின்முடிவில் வி ... ழித்துக்கொண்டு சத்தாயும் அசத்தாயுமிருக்கிறமனதை பூலோக புவர்லோக சுவர்லோகமாகிய இந்தவுலகத்தைச் சிருஷ்டிக்கவேண்டுமென்னு ... மிச்

சையுடன் கூட்டுகிருர். தினப்பிரளயத்தில் இந்தமூன்றுலகமாத்திரம் அழிகின்றதல்லவா.

எடு. அந்தமகதானது பிரமன் இச்சையினுலே ஏவப்பட்டதாகக்கொண்டு தன்னிடத்தில்நின்றும் மஹா ஆகாசத்தையுண்டுபண்ணுகின்றது. அந்த ஆகாசத்துக்கு சப்த்தம் குணமென்றுசொல்லுகிருர்கள்.

எசு. அந்த ஆகாசத்தினின்றும் சகலவாசனையுமுள்ளதாயும் பரிசுத்தமாயும் பலமுள்ளதாயும் இருக்கிற வாயுவுண்டாகின்றது. அதன்குணம் பரிசமென்று அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றது.

எஎ. அந்தவாயுவினின்றும் ஒளியுள்ளதாயும்இருளைப்போக்குகின்றதாயும் இருக்கிற தேயுவுண்டாகின்றது. அதன்குணம் உருவம் என்று சொல்லப்படுகின்றது.

எ[illegible]. அந்தத்தேயுவினின்றும் அப்பு உண்டாகின்றது. அதன் [illegible] இரதம். அந்தச்சலத்தினின்றும் பிரிதிவி யுண்டாகின்றது, [illegible] குணம் கந்தம் இதுதான் தினப்பிரளயத்தில் ஆதிசிருஷ்டி.

[illegible]. பன்னீராயிர தேவவருஷக்கணக்குள்ள தேவயுகம் முன் [illegible]ப்பட்டதல்லவா. அது எழுபத்தொருதரந் திரும்பினல் ஒரு [illegible]க்கு சிருஷ்டிக்கும் அதிகாரகால முடிகிறதான மன்வந்தரம் [illegible] சாஸ்திரத்தில் சொல்லப்படுகின்றது.

[illegible]0. இந்தப்படி மநுக்களின் அதிகாரகாலங்களான மநுவந்த[illegible]யும்சிருஷ்டியையும் சம்ஹாரத்தையும் அளவற்றதாக பிரம[illegible] விளையாடுகிறவர்போல் அடிக்கடிசெய்கிருர்.

[illegible]க. கிரதயுகத்தில் தருமமுஞ் சத்தியமும் நான்குபாதமாக[illegible]து அதில் மானுடர்களை அதர்மத்தினுலுண்டாகிற துன்பம் [illegible]றதில்லை.

[illegible]உ. மற்றயுகங்களில் களவு பொய் வஞ்சகம் இவைகளினல் [illegible]மாகச்சம்பாதித்த பொருள் கல்வி இவைமுதலானவையால் [illegible]மும் சத்தியமும் ஒவ்வொருபாதமாகக் குறைகின்றன.

[illegible]ங. கிரதயுகத்தில் மனிதர்கள் அதர்ம்மமில்லாமையால் நோ[illegible]வர்களாயும் இஷ்டசித்தி யடைகிறவர்களாயும் சுபாவமாய் நானூ

றுவருஷம் ஜீவிக்கிறவர்களாயும் இருக்கிறார்கள். தவமுதலானவையால் இதற்கு மேற்பட்டவயதுள்ளவர்களாயு மிருப்பார்கள் மற்றயுகங்களில் அந்த சுபாவமான நானூறுவயதில் ஒவ்வொரு நூறுவரிசையாய்க் குறைந்துபோகின்றது.

அச. மனிதர்களுக்கு வேதத்திற் சொல்லப்பட்ட ஆயுளும் இஷ்டசித்தியும் பிராமணனுடைய சாபாநுக்கிரகங்களும் தருமத்துக்குத்தக்கபடி யுகந்தோறும் பலிக்கின்றன.

அடு. கிரதயுகத்தில் தருமம் வேறாகவும் திரேதாயுகத்தின்தருமம் வேறாகவும் துவாபரயுகத்தின்தருமம் வேறாகவும் கலியுகத்தின் தருமம் வேறாகவும் யுகத்தின்குறைவுக்குத்தக்கபடி மனிதர்களுக்கு ஏற்பட்டிருக்கின்றன.

அசா. அதாவது கிரதயுகத்தில் தவமும்திரேதாயுகத்தில்ஆத்துமஞானமும் துவாபரயுகத்தில் எக்கியமும் கலியுகத்தில் தானமும் பெரும்பாலுமுக்கியதருமமாகவிதிக்கப்பட்டிருக்கின்றன.

அஎ. அந்தப்பிரம்மாவானவர் இந்தவுலகத்தைக் காக்கிற முதற்காக தன்முகம் தோள் துடை பாதம் இவைகளிலின்று பிறந்தவர்களான பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரவருணத்தாருக்கு [illegible] இம்மைக்கு மறுமைக்கு முபயோகமான கருமங்களைத் தனித்தனியாக ஓதித்தார்.

அஅ. பிராமணனுக்கு ஓதுவித்தல் ஓதல் எக்கியஞ்செய்தல் எக்கியஞ்செய்வித்தல் தானங்கொடுத்தல் தானம்வாங்குதல் ஆகிய ஆறுதொழிலையும் ஏற்படுத்தினர்.

அகூ. க்ஷத்திரியனுக்குபிரசைகளைத் தருமமாகக்காத்தல் தானங்கொடுத்தல் வேதமோதுதல் பாட்டு கூத்து ஸ்த்திரிமுதலிய விஷயங்களில் மநஞ்செல்லாமை இவைநான்கையும் ஏற்படுத்தினர். எக்கியஞ்செய்தல் முதலான தருமகாரியங்களும் அவனுக்குண்டு.

கூ0. வைசியனுக்கு பசுவைக்காப்பாற்றுதல் தானங்கொடுத்தல் வேதமோதுதல் சலத்திலும்பூமியிலுமுண்டானஇரத்தினம் [illegible] முதலியவைகளின் வியாபாரஞ்செய்தல் வட்டிவாங்குதல் பயிரிடுதல் இவ்வாறையும் ஏற்படுத்தினர்.

கூக. சூத்திரனுக்கு இந்தமூன்றுவருணத்தாருக்கும் பொறுமையின்றி பணிசெய்வதைமுக்கியமானதருமமா ஏற்படுத்தினர். இதனால் அவனுக்கு தானமுதலியவையு முண்டென்று தோன்றுகின்றது

கூஉ. புருடன்தேகமே பரிசுத்தம் அதில் தொப்புளுக்குமேல் அதிகபரிசுத்தம் ஆகையால் அந்தப்பிரம்மாவின்முகம் மிகவும்பரிசுத்தமாயிருக்கின்றது.

கூங. அந்தப்பிரம்மாவின் முகத்திற்பிறந்ததாலும் வேதத்தை தரிக்கிறதினாலும் க்ஷத்திரியாதிவருணத்தாருக்கு தருமத்தைஉபதேசிக்கிறதினாலும் இந்தவுலகத்தில் பிராமணன் தருமமா உயர்ந்திருக்கிறான்.

கூச. அந்தப்பிராமணனை சுயம்புவான பிரம்மாவானவர் தேவ[illegible]களுக்கு எக்கியம் சிரார்த்தமுதலியவைகளால் திருப்திசெய்யும்[illegible]பொருட்டும் மற்றவருணத்தாரை தர்ம்மோபதேசஞ்செய்து இரக்ஷிக்கு[illegible]ங்கம்பொருட்டும் தன்முகத்தில் நின்றும் தவஞ்செய்து முன்னர் ண்டு[illegible]பண்ணினரல்லவா.

[illegible]டு. எந்தப்பிராமணன் வாயினலேசொல்லப்பட்ட மந்திரபலகியு[illegible]லே தேவர்களும் பிதுர்க்களும் தன்றன் அவிற்பாகங்களை[illegible]கிறார்களோ அந்தப்பிராமணனைவிட எந்தப்பிராணி யுயர்ந்[illegible]கிறது.

கூசா. சராசரங்களுக்குள் பிராணனுள்ள புழுமுதலிய வுயர்ந்த[illegible]வைகளைப்பார்க்கிலும் அறிவோடுஜீவிக்கிற பசுமுதலியவையு[illegible] அவற்றிலும் மனிதர்கள் உயர்ந்தவர் அவர்களினும் வேத[illegible] அந்தணர்கள் உயர்ந்தவர்.

கூஎ. அவரினும் வேதப்பொருளையறிந்த பண்டிதர்கள் உயர்[illegible]அவரினும் விதிவிலக்குகளை நிச்சயமாயறிந்தவர்கள் உயர்ந்த[illegible]வரினும் விலக்கியவற்றையொழித்து விதித்தனவற்றை செய்[illegible]ள் உயர்ந்தவர் அவரினும் விருப்பு வெறுப்பின்றி பிரமத்தை[illegible]ம் ஞாநிகள்உயர்ந்தவர்.

கூஅ. பிராமணன்பிறப்பானது தருமத்தின் அழிவில்லாதஉரு[illegible]விருக்கின்றது தருமம்விளங்கும்பொருட்டுஉற்பவித்த அந்தப்[illegible]மணன் ஞாநத்தினலே மோக்ஷத்திற்குரியவனுகிறான்.

கூகூ. பூமியிற்பிறந்திருக்கிற பிராமணன் பெருமைபெற்றவனுய் சகல வருணத்தா ருடைய தருமமென்னும் பொக்கிஷத்தை அரசன் போற் காப்பாற்றுகிறுன்.

க00. பிராமணன் முதல்வருணத்தானுனதாலும் பிரம்மாவின் முகமாகிய உயர்ந்தவிடத்திற் பிறந்ததினுலும் இந்தவுலகத்தில் உண்டாயிருக்கிற சகலவருணத்தா ருடைய பொருள்களையும் தானம் வாங்க அவனே பிரபுவாகிறுன்.

க0க. ஆதலால் பிராமணன் ஒருவரிடத்தில் தானம்வாங்கினுலும் தன்பொருளையே சாப்பிடுகிறுன் தன் வஸ்திரத்தையே உடுத்துகிறுன் தன்சொத்தையே தானஞ்செய்கிறுன் மற்றவர்கள் அவன்றயையினுலேயே அவற்றையனுபவிக்கிறுர்கள். ளுக்கு

க0௨. அந்தப்பிராமணனுடையவும் மற்றவர்களுடையவ மாநுஷ்டானங்களைப் பகுத்தறிவதற்காக இந்தச் சாஸ்திரத் னியிற்பிறவாத புத்திசாலியான சுவாயம்பு மநுவானவர் பிர ஆத்து படுத்தினர். ானமும்

க0௩. இந்தச்சாஸ்திரத்தின் பயனையறிந்த பிராமண யற்சியுடன் இந்தச்சாஸ்திரம் ஓதத்தக்கது சிஷர்களுக்கும் லே மு மாய்ஓதுவிக்கத்தக்கது. மற்றவருணத்தான் இதைஓதுவிக்சக்கூ ியாய ாது.

க0ச. விரதாநுஸ்டானத்துடன் இந்தச் சாஸ்த்திரத் கின்றபிராமணன் மநோவாக்குக் காயங்களினுலுண்டாகும் பா ஓது ளோடு ஒருபோதும் சேருகிறுனில்லை. வங்க

க0ரு. இந்தச்சாஸ்திரத்தையோதுகின்ற பிராமணன் ஒரு வனு யிருந்தபோதிலும் தன்பந்தியிலிருக்கும் யாவரையும் பரிசுத்தப் படுத் துகிறுன். தன்வம்சத்திலுள்ள முன்னேழுபின்னேழு வம்சத் யும் நல்லகதியை யடைவிக்கிறுன் அவன் இந்தப்பூமிமுழுதுந் ானம் வாங்க யோக்கியனுகிறுன்.

க0சு. இந்தசாஸ்திரம் ஓதுகின்றவர்களுக்கு மங்களத் யும் புத்தியையும் கீர்த்தியையும் ஆயுளையும் மேலான மோக்ஷத் யும் உண்டுபண்ணுகின்றது.

க0எ. இந்தச்சாஸ்திரத்தில் எல்லாதருமங்களும் கர்மங்களின் குணதோஷங்களும் நான்குவருணத்தாருக்கும் தொன்றுதொட்டுவந்த ஒழுக்கங்களும் சொல்லியிருக்கின்றன.

கா0அ. வேதத்திலும் ஸ்மிருதியிலும் சொல்லப்பட்ட ஆசாரமே எல்லோருக்கும் முக்கியதர்ம்மமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் தான்சுகப்பட இச்சையுள்ளவன் இந்தச்சாஸ்திரத்தில் முயற்சியுள்ளவனாயிருக்கவேண்டியது.

க0கூ. ஒழுக்கத்தைவிட்ட பிராமணனுக்கு வேதத்திற்சொல்லியபலன் கிடைப்பதில்லை. ஒழுக்கமுடைய பிராமணனுக்கு சகலபலனும் குறைவின்றிக்கிடைக்கும்.

கக0. முனிவர்கள் ஒழுக்கத்தினாலே தருமத்தின் பலனையறிந்து எல்லாதவத்திற்கும் ஒழுக்கத்தையே முதற்காரணமாகச் சொல்லுகிறார்கள்.

# பொருட் டொகை.

ககக. இந்தச்சாஸ்திரத்தில் உலகத்தின் உற்பத்தியையும்-சாதகர்ம்மமுதலிய சமஸ்க்காரங்களையும்-பிரமசாரிகளின் விரதாநுஷ்டானங்களையும்-குருபணிவிடையையும்-வேதமுற்றுமோதியபின் செய்யவேண்டிய மங்களஸ்நாநத்தின்விதியையும்.

ககஉ. விவாகத்தையும்-விவாகபேதங்களையும் - பஞ்சமஹாயக்கியத்தின்விதியையும்-சிரார்த்தத்தின் பழமையான விதியையும்.

ககங. எல்லாருடைய ஜீவநோபாயத்தையும்-கிரகஸ்தன்தர்ம்மவிரதங்களையும்-சாப்பிடத்தக்கதையும்-சாப்பிடத்தகாததையும்-பிறப்பிறப்பினாலுண்டாகும் தீட்டின்சுத்தியையும் - சுவர்ன்னமுதலிய பஞ்சலோகத்தின்சுத்தியையும்,

ககச. ஸ்திரிகளின் தருமத்தையும்-வானப்பிரஸ்தரின் தருமத்தையும்-மோக்ஷத்திற்குக்காரணமான சந்நியாசத்தையும்-அரசர்களின் தருமத்தையும் - கடன்கோடன்முதலிய விவகாரத்தின் தீர்மானத்தையும்,

ககரு. சாட்சிவிசாரணையின்கிரமத்தையும்-மாதராடவர் தருமத்தையும்-விபாகத்தின் கிரமத்தையும்-சூதாடுவதையும் - திருடர்முதலானவரின் தண்டனையையும்.

ககசு. வைசியசூத்திரர்தருமத்தையும் - அநுலோமர் முதலிய சங்கரசாதியினுற்பத்திக்கிரமத்தையும்-சகலவருணத்தாருக்கும் ஆபத்துக்காலத்துக்குரியதருமத்தையும்-பிராயச்சித்தத்தையும்.

கஎ. வேறுதேகமெடுப்பதற்கேதுவானகருமத்தையும்-உத்தம மத்திம அதமரூபமான சுபாசுபகர்மத்தின்பிரிவையும்-மோக்ஷமார்க்கமான ஆத்மஞானத்தையும் - குணதோஷங்களை பகுத்தறிவதையும்.

ககஅ. பழமையான தேசவொழுக்கத்தையும்-சாதிவொழுக்கத்தையும்-குலவொழுக்கத்தையும்-வேதங்களை ஒப்புக்கொள்ளாத பாஷண்டர்களின் ஒழுக்கத்தையும் - மநுப்பிரசாபதியானவர் இந்தச்சாஸ்திரத்தில் வரிசையாகச்சொல்லியிருக்கிறார்.

ககக. இந்தமநுப்பிரசாபதியானவர் என்னாலே கேழ்க்கப்பட்டு இந்தச்சாஸ்திரத்தை எனக்கெவ்விதமாகச்சொன்னாரோ அவ்விதமாகவே உங்களுக்கு நான்சரியாகச்சொல்லுகிறேன் கேளுங்கள்.

முதலத்தியாயம்-முற்றிற்று,

---

இரண்டாவது

# அத்தியாயம்.

---

முதலாவது. மேலான பரமாத்துமஞானமாகிற தருமத்தையறியும்பொருட்டு சகத்துக்குக்காரணமாகிய பிரமசுவரூபத்தை முதலத்தியாயத்தாற்சொல்லி அதற்குறுப்பாகிய சாதகர்மமுதலிய தருமத்தை சொல்லத்தொடங்கினர். வேதமறிந்தவர்களாயும் தர்ம்மவான்களாயும் எப்போதுங்காமக்குரோத மில்லாதவர்களாயும் இருக்கிறபிராமணர்களாலே யாதொருதருமமானது மநமகிழ்ச்சியோடு அநுட்டிக்கப்பட் டிருக்கிறதோ அந்தத் தருமத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

உ. சுவர்க்கமுதலிய ஒருபலத்தைவிரும்பி தவமுதலிய அறத்தைச்செய்தல்யாவருக்குநன்றன்று. ஆனால் அதுவிருப்பாமை இவ்வுலகத்திலரிது வேதமோதுதலும் எக்கியஞ் செய்தலுங் காமியமாகவேயிருக்கின்றன.

ங. இந்தச்செய்கையினாலே இந்தப்பயன் அடையப்படுகிறது என்றுசொல்வது சங்கற்பம் அதனாலே இச்சையுண்டாகிறது அதனா

லே எக்கியங்களையும் விரதங்களையும் நியமங்களையும் ஒழுக்கங்களையும் செய்கிறார்கள்.

ச. இச்சையைநீக்கினவனுக்கு எந்தநூலிலும் உலகத்தில் எப்பொழுது எவ்விதசெய்கையுங் காணப்படவில்லை. கொஞ்சமாவது எந்தச்செய்கையைச்செய்கிறானோ அதுமுழுதும் காமத்தின் செய்கைதான்.

ரு. எக்கியாதிகருமங்களை பலத்தைவிரும்பாமல் செய்பவன் மோக்ஷத்தையடைகிறான் இம்மையிலுந் தானினைத்தபடி சர்வாபீஷ்டங்களையும் அடைகிறான்.

சா. இருக்குமுதலிய நான்குவேதங்களும் இந்தவேதமறிந்த இருடிகளின் ஸ்மிருதியும் அவர்களின் அநுஷ்டானமும் சாதுக்களின் ஒழுக்கமும் தன்கன்மநதின் சந்தோஷமும் தருமத்துக்குக்காரணமாகவிருக்கின்றன.

எ. மநுப்பிரசாபதியினால் எந்தவருணத்தாருக்கு எந்தத்தருமம்விதிக்கப்பட்டதோ அதுமுழுதும் வேதத்திற்சொல்லப்பட்டிருக்கின்றது அவர் எல்லாவேதத்தின் பொருளையும் நன்றாக வறிந்தவரல்லவா.

அ தெரிந்தவன் இந்தச்சாஸ்திரத்தை ஞானக்கண்ணினலறிந்து இதிற்சொல்லியிருக்கிற தருமங்களை வேதத்தினுற்சொல்லப்பட்டதாகவேயெண்ணி தன்தருமத்தை நடத்தக்கடவன்.

கூ. சுருதியிலும் ஸ்மிருதியிலும் சொல்லப்பட்ட தருமத்தை அநுஷ்டிக்கிறவன் இவ்வுலகத்தில் கீர்த்தியடைகிறான்-இறந்தபின் ஒப்பற்ற சுவர்க்கசுகத்தையுமடைகிறான்.

க0. வேதத்தை சுருதியென்றும் தருமசாஸ்திரத்தை ஸ்மிருதியென்றும் அறியத்தக்கது-அவ்விரண்டையும் விரோதமான தர்க்கசாஸ்திரயுக்தியைக்கொண்டு ஆக்ஷேபிக்கக்கூடாது அவற்றினாலே தருமம்விளங்குகிறதல்லவா.

கக. எவன் தருமத்திற்குக்காரணமான அவ்விரண்டையும் தர்க்கசாஸ்திரயுக்தியினால் அவமானஞ்செய்கிறானோ, அவன் பெரியோர்க

ளால் கர்ம்மாநுஷ்டானத்தினின்றும்நீக்கத்தக்கவன்-வேதத்தைநிந்தி
ப்பதால் தெய்வமில்லையென்று சொல்லுபவனுமாவான்.

கஉ. வேதம் ஸ்மிருதி பெரியோர்க ளநுட்டானம் கன்மநதின்
சந்தோஷம் இந்தநான்கையும் தர்மத்துக்குஅடையாளமாகச் சொல்
லுகிறார்கள்.

கங. பொருள் காமம் இவைகளில்சம்பந்தப்படாதவர்களுக்கு
தருமத்தினுபதேசம் விதிக்கப்படுகிறது-தருமத்தையறிய மநமுள்ள
வர்களுக்கு வேதமே முக்கியப்பிரமாணமாகவிருக்கின்றது.

கச. எந்தவிஷயத்தில் வேதம் ஒன்றுக்கொன்று விரோதமாக
விருக்குமோ அந்தவிரண்டும் - தருமமாகவேசொல்லப்படுகின்றன, அ
ந்தவிரண்டு தருமத்தையும் பெரியோர் தெளிவாகச் சொல்லியிருக்கி
றார்கள்.

கரு. சூரியனுதயமானபின்பும் உதயமாதற்குமுன்பும் சூரிய
னும் நட்சத்திரமும் இல்லாதிருக்குங்காலத்தும் எக்கியஞ் செய்ய
வேண்டுமென்று வேதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது-ஆதலால்உத
யமானபின்பு எக்கியம் ஓமம் பண்ணவேண்டுமென்றுவிதிக்கிற வேதத்
துக்கும் உதயத்துக்குமுன்பு அவற்றைச்செய்யவேண்டுமென்றுவிதி
க்கிறவேதத்திற்கும் ஒன்றுக்கொன்று விரோதமில்லை-எனெனில் அவ்
விரண்டுந்தருமமாகவே சொல்லப்பட்டிருக்கின்றனவல்லவா.

கசு. எவனுக்கு கருப்பாதானமுதல் தேகசமுஸ்க்காரம் வரை
யில்மந்திரங்களால் அநுஷ்டானம் விதிக்கப்பட்டிருக்கின்றதோ அந்
தத்துவிஜனுக்கிந்த சாஸ்திரத்தை ஓதுதற் கதிகாரமுண்டு மற்றவர்க
ளுக்கில்லை.

கஎ. சரஸ்வதியென்னும் திருஷத்துவதி என்னும் தேவநதிகளு
டைய மத்தியப்பிரதேசமானது தேவர்களால் ஏற்படுத்தப்பட்ட
பிரம்மாவர்த்ததேசமென்று சொல்லப்படும்.

கஅ. அந்தத்தேசத்தில் பெரியோர்கள் எப்போதும்வசிக்கின்ற
மையால் பிராமணாதிவருணத்தாருக்கும் சங்கராதிகளுக்கும் சிஷ்டா
சாரமானது அநாதியாயவ்விடத்தினின்றுமுண்டாகிறது.

கக. குருக்ஷேத்திரம் மச்சதேசம் பாஞ்சாலதேசம் [illegible]டமது
ரை இதுகள் பிர்மரிஷிகள்வசிக்கின்ற தேசங்கள்-இவைகள் பிர்மாவ
ர்த்ததேசத்தின் சிறப்பிற்குக் கொஞ்சங் குறைந்திருக்கின்றன.

உ0. இந்தத்தேசங்களில் பிறந்த பிராமணனிடத்தினின்றும்ச கலரும் தன்தன் தருமங்களை யறிந்துகொள்ளக்கடவர்கள்.

உக. இமோர்ப்பர்வதத்திற்கும் விஞ்சைபர்வதத்திற்கும்நடுவாயும் சரஸ்வதிநதி மறைந்த விசனசதேசத்திற்குக் கிழக்காயும் பிரயாகைக்குமேற்காயும்இருக்கிற இடமானது மத்தியதேசமென்று சொல்லப்படுகின்றது.

உஉ. கிழக்குசமுத்திரந்தொடங்கி மேற்குசமுத்திரம்வரையில் முன்சொன்ன மலைகளின் நடுப்பிரதேசமானது சாதுக்கள்வசிக்கிற ஆரியாவர்த்ததேசமென்று சொல்லப்படுகின்றது.

உந. கிருஷ்ணசாரமென்னு மானனது எந்தவிடத்தில் சுபாவமாய் சஞ்சரிக்கின்றதோ அந்தவிடந்தான் யாகஞ்செய்தற் குரியது. மற்றவிடம் அசுத்தமான மிலேச்சதேசமென்று சொல்லப்படும்.

உச. இப்படிப்பட்ட புண்ணியதேசங்களை துவிஜர்கள் வேறுதேசத்திற்பிறந்தவராயினும் வந்தடையவேண்டியது. அல்லது சூத்திரன் ஊழியத்தொழிலைவிட வேறுவிர்த்தியை எந்தவிடத்தி லடையமாட்டானோ அந்தவிடத்தில் வசிக்கத்தக்கது.

உரு. இதுவரையில் ஜெகத்தினுற்பத்தியையும்-தருமத்திற்குக் காரணமான வேதசாஸ்திர புண்ணிய க்ஷேத்திரங்களையும்-உங்களுக்குச் சங்கிரகமாகச்சொன்னேன் இனி வர்ணாசிரம தருமத்தைக் கேளுங்கள்.

உசா. துவிஜாதிகளுக்கு வேதத்திற்சொல்லப்பட்டிருக்கிற பரிசுத்தமான மந்திரகர்மங்களினாலே கர்ப்பாதானமுதலான இம்மையில் சரீரத்தைப் பரிசுத்தம்பண்ணவும், மறுமையில் புண்ணிய லோகத்தைக் கொடுக்கவும், உரியதான சரீரசுத்தி யானது செய்யத்தக்கது.

உஎ. கர்ப்பாதான மந்திரத்தாலும், சீமந்த ஓமத்தாலும், சாதகர்மம்-நாமகரணம்-அன்னப்பிராசனம்-சௌளம் - உபநயனம் இதுகளினாலும், துவிஜர்களுக்கு சம்போகஞ்செய்யக்கூடாத தினத்தில் செய்ததனாற் றுனுற்பத்தியானதோஷமும், மாதாவின் கர்ப்பத்தில் வசித்த தோஷமும், நீக்கப்படுகின்றன.

உஅ. வேதமோதுவதாலும் மதுமாம்சபக்ஷணஞ் செய்யாதிருக்கிற விரதாதிகளாலும், ஔபாசன ஓமங்களினாலும், தேவ ரிஷிபிதர் தர்ப்பணத்தினாலும், பஞ்சமஹா எக்கியத்தாலும், அக்கினிஷ்டோமாதிகளினாலும், சரீரமானது மோக்ஷத்திற் குரியதாகச் செய்யப்படுகின்றன.

## சாதகர்ம்மாதிசம்ஸ்க்காரம்.

உகூ. தொப்புள் கொடியறுப்பதற்கு முன்னம் சாதகர்ம்மமென்னுஞ் சம்ஸ்க்காரம் புருஷனுக்குச் செய்யவேண்டியது. அப்போது அந்தக்குழந்தைக்கு- நெய்-தேன்-இவற்றில் சுவர்ன்னத்தைமந்திரத்தோடிழைத்து நாவிற்றடவவேண்டியது.

ங0. இந்தக்குழந்தைக்கு பிறந்த பத்தாவது அல்லது பன்னிரண்டாவதுதினத்தில் புண்ணியதிதியில் நல்லமுகூர்த்தத்தில் நல்ல நட்சத்திரத்தில் நாமகரணஞ் செய்யவேண்டியது.

ஙக. பிராமணனுக்கு மங்களத்தையும் க்ஷத்திரியனுக்கு பலத்தையும், வைசியனுக்கு பொருளையும் சூத்திரனுக்குத்தாழ்வையும் காட்டுகிறதான பெயரை இடவேண்டியது.

ஙஉ பிராமணனுக்குச் சர்ம்மவென்பதையும், க்ஷத்திரியனுக்கு வர்ம்ம என்பதையும், வைசியனுக்கு பூதியென்பதையும், சூத்திரனுக்குத் தாசனென்பதையும், தொடர்ப்பேராகஇடவேண்டியது.

ஙங. ஸ்த்திரிகளுக்கு சுகமாகக் கூப்பிடத்தக்கதாயும், கொடுமையில்லாததாயும், பிரிவான அர்த்தமுள்ளதாயும், மநோக்கியமாயும், மங்களமாயும், தீர்க்காக்ஷரத்தையுடையதாயும், ஆசீர்வாதத்தைக் கொடுக்கிறதாயுமிருக்கிற பெயரையிடவேண்டும்.

ஙச. குழந்தைபிறந்த நான்காவதுமாதத்தில் அந்தச்சிசுவை பிறந்தவீட்டினின்றும் வெளியிற்கொண்டுவந்து சூரியனுக்குக்காட்டவேண்டியது. ஆறாவதுமாதத்தில் அன்னப்பிராசனஞ் செய்விக்கவேண்டியது. அல்லது தங்கள்குலவழக்கப்படி மூன்றாவதுமாதந் தொடங்கி எப்போதாவது இவ்விரண்டையுஞ் செய்யலாம்.

ஙரு. துவிஜாதிகளுக்கு பிறந்தவருஷத்திலாவது, மூன்றாவது வருஷத்திலாவது, வேதத்திற்சொன்னபடி தர்ம்மமாக சௌளகர்ம்மஞ் செய்யவேண்டியது.

௩௬. பிராமணனுக்கு கருப்பமானதுமுதல் எட்டாவதுவயதிலும், க்ஷத்திரியனுக்கு கருப்பமானதுமுதல் பதினோராவது வயதிலும், வைசியனுக்கு மேற்சொன்னபடி பன்னிரண்டாவதுவயதிலும் உபநயநஞ் செய்யவேண்டியது.

௩௭. பிரம்மதேஜஸை விரும்புகிற பிராமணனுக்கு ஐந்தாவது வயதிலும, பலத்தைவிரும்புகிற க்ஷத்திரியனுக்கு ஆறுவதுவயதிலும், பொருளைவிரும்புகிற வைசியனுக்குஎட்டாவதுவயதிலும், உபநயநஞ் செய்யத்தக்கது.

௩௮. பிராமணனுக்குப் பதினாறுவயதுவரையிலும், க்ஷத்திரியனுக்கு இருபத்திரண்டுவயதுவரையிலும், வைசியனுக்கு இருபத்துநாலு வயதுவரையிலும், உபநயநம் இரண்டாம்பக்ஷமாகச் செய்யலாம்.

௩௯. அதன்பின்பு இந்தமூன்றுவருணத்தாரும் மேற்சொல்லியகாலத்தில் உபநயநமுதலிய சமுஸ்க்காரஞ் செய்யப்படாதவர்களானால் காயத்திரிமந்திரத்தினின்றும் நீங்கினவர்களாயும், விராத்தியாளென்னும் பெயருள்ளவர்களாயும், பெரியோர்களாலே வைதீககாரியத்தினின்று நீக்கப்பட்டவர்களாயும், ஆகிறார்கள்.

௪0. இப்படி அபரிசுத்தாளான இவர்களுக்கு வேதஞ்சொல்லி வைக்கக்கூடாது. கஷ்ட்டகாலத்திலும் அவர்களிடத்தில் பெண்வாங்கவுங் கொடுக்கவுங்கூடாது.

௪௧. பிராமண-க்ஷத்திரிய-வைசிய-பிரம்மச்சாரிகள்-கறுப்புமான்-புள்ளிமான்-வெள்ளாடு-இவைகளின் தோலுகளைஉத்தரியமாகவும் க்ஷணப்பனூர் பட்டுநூல் செம்புலியாட்டின்மயிர் இவைகளால் செய்யப்பட்டதை அரையுத்தரியமாகவும் வருணக்கிரமமா தரிக்கவேண்டியது.

௪௨. பிராமணனுக்கு மிஞ்சிப்புல்லினாலும் க்ஷத்திரியனுக்கு வில்லினாணையொத்த முறுவற்புல்லினாலும் வைசியனுக்கு க்ஷணப்பனூரினாலும் மேடுபள்ளமில்லாமல் மெல்லிதாப்பின்னி மூன்றுவடமா மேலரைஞாண் கட்டவேண்டியது.

௪௩. இந்தமூன்றும் அகப்படாதகாலத்தில் மேற்சொன்ன மூன்று வருண பிரம்மச்சாரிகளுக்கும் கிரமமாக தருப்பை நாணல் சவ

ட்டைக்கோரை இதுகளினல் மூன்றுவடம் அல்லது தங்கள் குலவழ ச்சப்படி ஐந்துவடமாவது ஒருமுடியுடன் சட்டவேண்டியது.

✓ ௪௪ பிராமணனுக்குப் பஞ்சிநூலாலும் க்ஷத்திரியனுக்கு க்ஷ ணப்பநூலாலும் வைசியனுக்கு வெள்ளாட்டின்மயிராலும் மூன்று வடமாகத்தோளில் பூணூல்தரிக்கவேண்டியது.

✓ ௪௫ பிராமணனுக்கு வில்வம்-பலாசம் இவ்விரண்டையும் க்ஷ த்திரியனுக்கு ஆல்-கருங்காலி - இவ்விரண்டையும், வைசியனுக்கு இ ரளி - அத்தி - இவ்விரண்டையுந் தண்டமாக விதிக்கப்பட்டிருக்கின் றன ஆனல் இவ்விரண்டில் இஷ்டமான ஒன்றைத்தான் தரிக்க வேண் டியது.

௪௬. பிராமணன் பூமிமுதல் தன்றலையளவாகவும்க்ஷத்திரியன் நெற்றியளவாகவும் - வைசியன்மூக்களவாகவும்-தண்டத்தைத் தரிக்க வேண்டியது

௪௭ இந்தத்தண்டங்கள் கோணலில்லாமலும் காயமில்லாமலு ம்பார்வைக்கு அழகாயும் மனிதர்களுக்குப்பயத்தை யுண்டுபண்ணு ததாயும் அதன்தன் தோலுகளோடகூடினதாயும் நெருப்பினல் சுட ப்படாததாயும் இருக்கவேண்டியது.

௪௮ அவரவர்களுக்கு இஷ்டமானவொருதண்டத்தை யெடுத் துக் கொண்டு சூரியனை நமஸ்காரஞ் செய்து அக்கினி வலஞ் செய்து மேற்சொல்லப்போகிற விதிப்படி பிக்ஷையெடுக்கவேண்டியது.

௪௯. பிரம்மச்சாரிகளானமூன்றுவருணத்தாரில் பிராமணன் ப வதிபிக்ஷாந்தேகியென்றும், க்ஷத்திரியன் - பிக்ஷாம்பவதிதே யென் றும்-வைசியன் - தேகிபிக்ஷாம்பவதியென்றும், வசனத்தைச் சொல்லி பிக்ஷை கேழ்க்க வேண்டியது.

✓ ௫0. உபநயநமானவுடனே அதன் அங்கபூதமான பிக்ஷயை தாயினிடத்திலாவது, அவளது-தங்கை-தமக்கை-இவர்களிடத்திலாவ து-தன் தமக்கையிடத்திலாவது-அல்லது-இவனிடத்தில் அன்புடைய வரிடத்திலாவது முன்னம்வாங்கவேண்டியது.

௫௧. இந்தவிதிப்படி மூன்றிடத்திற்குக் குறையாமல் த குருவுக்கு ப்போதுமானமட்டும் பிக்ஷைவாங்கிக்கொண்டு அதைத்தன்குருவுக்கு

நிவேதநஞ்செய்து கிழக்குமுகமாகவிருந்து ஆசமநஞ்செய்து புசிக்கவேண்டியது,

௫௨. ஆயுளைவிரும்புகிறவன்-கிழக்குமுகமாயும், கீர்த்தியைவிரும்புகிறவன்-தெற்குமுகமாயும், சம்பத்தைவிரும்புகிறவன்-மேற்குமுகமாயும், சத்தியத்தை விரும்புகிறவன்-வடக்கு முகமாயும், இருந்து புசிக்கவேண்டியது.

௫௩. துவிஜன் தினந்தோறும் சாப்பிடும்போது கைகால்சுத்திசெய்துகொண்டு ஆசமநம்செய்து அன்னத்தைப் பூசித்துப் பின்பு பரிஷேசனம்பண்ணி போசனம்பண்ணவேண்டியது-பின்பும்-கண்-காது-மூக்கு இவைகளைத்துடைத்து ஆசமநஞ்செய்யவேண்டியது.

௫௪. தினந்தோறுஞ்சாப்பிடுகிற அன்னம்விஷ்ணுசொரூபமாகையால் அதைநிந்தியாமல் பூசித்துச் சந்தோஷத்துடன் அன்னத்தைநன்றாகப் பார்த்துப்புகழ்ந்து புசிக்கவேண்டியது.

௫௫. அன்னத்தைப்பூசித்துப்புசித்தால் தயிரியம் பலன் இவைகளைக்கொடுக்கிறது நிந்தித்தால் அவ்விரண்டையும் அழித்துப் போடுகின்றது.

௫௬. தான்புசித்துமிகுந்த எச்சில் அன்னத்தை எவனுக்கும் இடக் டாது. இரவும்பகலு மிரண்டு விசையன்றி புசிக்கப்போகாது அதி ாகவும்புசிக்கலாகாது புசிக்கும்போது மத்தியிலெழுந்திருந்தால் பி னும் அந்த அன்னத்தைப்புசிக்கலாகாது கைசுத்திபண்ணாமல் அசு தாளைப் பார்க்கலாகாது.

ல் நா . அதிகமாகப்புசித்தால் நோயையும், ஆயுட்குறைவையும்சு ஙிறுத் போகக்குறைவையும், புண்ணியக்குறைவையும், உலகநிந்தை வர்க ; உண்டுபண்ணும், ஆகையால் அதை நீக்கவேண்டியது. யையும்

அ. விப்பிரன் பிரம்மதீர்த்தத்தினுலாவது, காயதீர்த்தத்தினு ௫ தேவதீர்த்தத்தினுலாவது, ஆசமநஞ் செய்யவேண்டியது. பி லாவது த்தத்தினுலொருபோதுஞ் செய்யலாகாது. ஆர்தீர்

கூ. பெருவிரலி னடிப்பிரதேசத்தை பிரம்மதீர்த்தமென்றும், விரலின் அடிப்பிரதேசத்தை காயதீர்த்தமென்றும், விரல்களி சுண்டிய தேவதீர்த்தமென்றும், பெருவிரலுக்கும் ஆட்காட்டிவிரலு னுனி மத்தியை பிதுர்தீர்த்தமென்றும் சொல்லுகிறார்கள். க்கும்,

௬௰. முன்னம்ஜலத்தை மந்திரத்தோடுமூன்றுதரஞ் சாப்பிட்டுப் பின்ஜலத்தினுல் வாயையிரண்டு விசைத்துடைத்து பின்பு-கண்காது-மூக்கு-தோள்-மார்பு-தலை-இவைகளையுந் துடைக்க வேண்டியது-இதுதான் ஆசமநம்.

௬௧. தருமந்தெரிந்தவனும் ஆசாரத்தைவிரும்புகிறவனுமிருக்கிறவன்-சூடு-நுரை-இல்லாத ஜலத்தினுல் இரகசியமாய் கிழக்கு அல்லது வடக்குமுகமாக இருந்து ஆசமநஞ்செய்யவேண்டியது.

௬௨. பிராமணன் மார்புவரையில் போகத்தக்கஜலத்தினுலும் க்ஷத்திரியன்-கழுத்துவரையிற் போகத்தக்கஜலத்தினுலும், வைசியன் உண்ணுக்குவரையிற் போகத்தக்கஜலத்தினுலும், சூத்திரன்-நாவினுமுதட்டினும் படத்தக்கஜலத்தினுலும் - ஆசமநஞ்செய்தால் பரிசுத்தனுகிறுன்.

௬௩. துவிஜர்கள் உத்தரியத்தையாவது, பூணுநூலையாவது, இடதுதோளினும், வலதுகையின்கீழினும், போட்டுக்கொண்டால் உபவீதமென்றும், வலது தோளினும், இடதுகையின் கீழும் போட்டுக்கொண்டால் பிராசியினுவீதமென்றும். கண்டத்துமாலையாகப் போட்டுக்கொண்டால் நிவீதமென்றும், சொல்லப்படுகின்றது.

௬௪. இந்த மூன்று வருணப் பிரமச் சாரிகளும், அவர்கள் மிஞ்சி உத்தரீயம்-தண்டம்-பூணுநூல்-கமண்டலம்-இவைகள் பரிசுத்தமானுலும்-பின்னமாகப்போனுலும் - தண்ணியிற்புதைத்துவிட்டுப் புதிதாய் அதனதன் மந்திரங்களால் கிரகித்துக்கொள்ளவேண்டியது.

௬௫. பிராமணன்-க்ஷத்திரியன்-வைசியன்-இவர்களுக்கு மாய் பதினாறு இருபத்திரண்டு இருபத்திநாலு இந்தவயதுகளில் கேசாந்தம் என்னும்விரதம் செய்யவேண்டியது.

௬௬. ஸ்திரிகளுக்கு இந்தசாத கர்மமுதலிய கர்மங்களை அந்தந்தக்காலத்தில் சரீரசுத்தியின்பொருட்டுவேதமந்திரமில்லாமல் நாமங்கலாகத் * தந்திரத்தினுலே செய்யவேண்டியது.

---

* தந்திரமாவது-மந்திரமின்றிச்செய்யும் கிரியைகள்.

சுஎ. ஸ்த்திரிகளுக்கு விவாகத்தை உபநயநமாகவும், பர்த்தாவுக்கு பணிவிடைசெய்வதைக் குருகுலத்தில் வேதமோதுவதாகவும் வீட்டைக்காப்பாற்றுவதை சமிதாதானமாகவும், சொல்லப்படுகிறது.

சுஅ. துவிஜர்களுக்கு உபநயநவிதிசொல்லிமுடிந்தது. இரண்டாவது ஜெநநத்தை பிரகாசப் படுத்துவதாயும், புண்ணியமாயு மிருக்கிறசெய்கையை விவரமாகக்கேளுங்கள்.

சுகூ. குரு-அல்லது தகப்பன்-சீடன்-அல்லது-புத்திரனுக்கு உபநயநஞ்செய்வித்து முதல் ஆசாரத்தையும், சௌசத்தையும், சமிதாதாநத்தையும் - சந்தியாவந்தநத்தையும்-சொல்லிவைக்கவேண்டியது.

எ0. வேதமோதப்போகிற சீடன்-சாஸ்திரப்படி ஆசமநஞ்செய்து பரிசுத்தமானவஸ்திரமுள்ளவனுப் இந்திரியக்கட்டுப்பாட்டுடன் வடக்கு-அல்லது - கிழக்குமுகமாக கைகளைக்கட்டிக்கொண்டு ஓதவேண்டியது.

எக. வேதமோதத் துவக்கும்போதும், முடிக்கும்போதும், சீஷன் குருவின்பாதங்களைத்தொட்டு நமஸ்காரஞ் செய்யவேண்டியது. ஓதும்போது இரண்டுகையுங்கட்டிக்கொள்ள வேண்டியது. அதற்குப் பிரம்மாஞ்சலியென்றுபெயர்.

எஉ. குருவை நமஸ்காரஞ் செய்யும்போது இரண்டுகைகளையும் [illegible]ற்றிவைத்துக்கொண்டு தன்வலதுகையினுல் குருவின்வலதுகாலையும், இடதுகையினுல் குருவின் இடதுகாலையும், தொடவேண்டியது

எங. குருவானவர் வேதமோதவந்த சிஷனை சோம்பலில்லாமல் நாடோறும் துவக்கும்போது துவக்கென்றும், முகிக்கும் போது நிறுத்தென்றும், சொல்லவேண்டியது.

எச. பிராமணன் வேதமோதத்துவக்கும்போதும், முடிக்கும்போதும், பிரணவத்தைச்சொல்லவேண்டியது. அப்படி முன்னர்சொல்லாததினுல் ஓதினவேதம் கொஞ்சங்கொஞ்சமாய் மறந்துவிடும். பின்சொல்லாவிட்டால் ஞாபகத்தில் தரிக்கப்படமாட்டாது.

எரு. கிழக்குமுகமாகத் தருப்பைகளைப்பரப்பி அதன்மேலுட்கார்ந்து இரண்டுகைகளினும் பௌத்திரம் போட்டுக்கொண்டுமூன்று பிராணுபாமம்செய்து பின்பு பிரணவத்தைச் சொல்லவேண்டியது.

எசு. பிரம்மாவானவர்பிரணவத்தினவயவங்களான அகார-உகார-மகாரத்தையும், மூன்று * வியாகிருதியையும், மூன்றுவேதத்தினின்றும் கிரமமாக உண்டுபண்ணினர்.

எஎ. மேலும் தது-என்னும்-துவக்கத்தையுடைய காயத்திரியின் மூன்றடியையும், மூன்றுவேதத்தினின்றுமே யுண்டுபண்ணினர்.

எஅ. இந்த பிரணவத்தையும், மூன்றுவியாகிருதியை முன்னிட்டிருக்கிற இந்தக்காயத்திரியையும், சந்தியாகாலங்களில் செபிக்கிற பிராமணன் மூன்றுவேதமோதின புண்ணியத்தை யடைகிறன்.

எகூ. இந்தக்காயத்திரியை ஊருக்குவெளியில் நதிதீரம்-காடு இவைகளில் ஒருமாதம்வரையில் தினந்தோறும் ஆயிரந்தரம் செபிக்கிற பிராமணன் மஹாபாதகத்திலும்நின்று தோலில்நின்றும் பாம்பு நீங்குவதுபோல் நீங்குகிறன்.

அ0. இந்தச்செபம்-உபநயநமுதலிய கர்மம் - இவைகள் இல்லாத மூன்றுவருணத்தாரும் பெரியோர்களினல்நிந்திக்கப்படுவார்கள்

அக. பிரணவத்தையும், மஹாவியாகிரதியையும், முன்னிட்டுக்கொண்டிருக்கிற காயத்திரியை மோக்ஷத்தையடைகிறதற்கு வழியாகச்சொல்லுகிறர்கள்.

அஉ. எவன்-மூன்றுவருஷவரையில் தினந்தோறுஞ் சோம்பலில்லாமல் இந்த மந்திரங்களைச் செபஞ்செய்கிறனே அவன் வாயுவைப்போல் ஆகாயத்தில் * காமசாரியாய் பிரம சாயுச்சியத்தை யடைகிறன்.

அங. பிரணவம் பரப்பிரம்மமாகவும், பிராணயாமம் சாந்திராயணமுதலியவற்றைக்காட்டினு மேலானதவமாகவும், சொல்லப்படுகின்றன. காயத்திரியைச்செபிக்கிறவனுக்குப் பாவமில்லை சத்தியமாய் பேசனிக்கிறவனுக்கு மௌனவிரதம்வேண்டுவதில்லை.

---

* வியாகிருதி என்பது காயத் திரிக்கு முன் சொல்லப் படும் ஓர் மந்திரவிசேஷம்.

* காமசாரி என்பது தன்னிஷ்டப்படி ரூப மெடுத்துச் சஞ்சரிப்பது.

அச. வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிற எக்கிய யாகாதிகாரியங்கள் அழிவுள்ள பலத்தைக்கொடுக்கின்றமையால் அழிவுள்ளதென்றும் பிரணவம் பரமாத்தும சுவரூபத்தைத்தெரிவித்துமோக்ஷத்தைக் கொடுக்கின்றமையால், அறிவற்றதென்றும், பிரமனால்சொல்லப்பட்டிருக்கின்றன.

அரு. அமாவாசி பௌர்ணமி இதில் செய்யவேண்டிய*ஸ்தாலீ பாகமுதலிய விதி யெக்கியத்தைக்காட்டினும்செப எக்கியமானது பத்துப்பங்குபர்ந்தது, அது இரகசியத்திற் செயப்பட்டால் நூறுபங்கதிகமாயும், மனதிலதன்பொருளையறிந்து உதடசையாமற்செபித்தால் ஆயிரம்பங்கதிகமாயும், சொல்லப்படுகின்றது.

அசா. விதி யெக்கியத்தோடுகூடின நான்கு * பாக எக்கியங்களும், காயத்திரிசெபத்தின் பதினறிலொருபங்கின் மகிமையை யடைகிறதற்குத் தகுதியற்றதாக விருக்கின்றன.

அஎ. பிராமணன் காயத்திரி செபத்தினலேயே மோக்ஷசித்தியை யடைகிறான், இதிற் சந்தேகமில்லை வேறானயாகாதிகளைச் செய்தாலுஞ் செய்யலாம், விட்டாலும் விடலாம், யாகத்தைச் செய்யவே வேண்டுமென்னுங் கடைமையில்லை, அதனலே பிராமணன் எல்லாப் பிராணிகளுக்கும், மித்திரனென்று சொல்லப்படுகிறான்.

அஅ. மனதை யபகரிப்பதை சுபாவமாகவுடைய சப்தாதிவிஷயங்களிற் செல்லாநின்ற இந்திரியங்களை சுவாதீனப்படுத்துகிறவிஷயத்தில் தேர்ப்பாகன் குதிரைகளைச் சுவாதீனப்படுத்துகிற விஷயத்திற்போல அறிவுள்ளவன் முயற்சிசெய்யவேண்டியது.

அகூ. பெரியோர்களினல் பதினென்றாகப்பகுக்கப்பட்ட இந்திரியங்களை கிரமமாகச் சொல்லுகிறேன்.

கூ0. காது-தொக்கு-கண்-நா-மூக்கு-ஆக - ஐந்து ஆசனம்-உபஸ்தம்-கை-கால்-சொல்-ஆக-ஐந்து.

---

* ஸ்தாலிபாகம் என்பது பஞ்சபாத்திரத்திற் பாகம்பண்ணிய அன்னத்தாற்செய்யும் ஓமம்.

* பாகஎக்கியம் என்பது-பஞ்சமஹா எக்கியத்தில் பிரம எக்கிய நீங்கலாக அன்னத்தினற்செய்யத்தக்க மற்றநான்கும்.

கூக. இவைகளில்-காதுமுதல்-மூக்குவரையில், ஞானேந்திரியம் ஐந்து ஆசனமுதல் சொல்வரையில் கர்மேந்திரியம் ஐந்து.

கூஉ. தன்செய்கைக்குத் தக்கபடி இவ்விருவகையாகிய பத்து இந்திரியங்களையும் ஏவுகிற மனதை பதினோராவது இந்திரியமென்று அறியத்தக்கது அதைச்செயித்தால் மற்ற எல்லா இந்திரியங்களுஞ் செயிக்கப்பட்டவை யாகும்.

கூங. இந்திரியங்கள் விஷயத்தில் சஞ்சரிப்பதால் தோஷத்தை யடைகிறான் அதுகளையடக்கினால் மோக்ஷமுதலிய சித்தியைப் பெறுகிறான் இதிற்சந்தேகமில்லை.

கூச. ஆசையானது அநுபோகத்தினால் ஒருபோதும் அடங்குகிறதில்லை நெய்யினால் அக்கிபோல அநுபோகத்தினால் விர்த்தியையே யடையும்.

கூரு. ஒருவன் சகலபோகங்களையும் அநுபவிக்கிறான் ஒருவன் அப்போகங்களை அற்பமாகவெண்ணி நிவர்த்திசெய்கிறான் இதில் அநுபவிக்கிறவனைவிட நிவர்த்திசெய்கிறவன் உயர்ந்தவன்.

கூசா. விஷயசம்பந்தப்பட்டிருக்கிற இந்திரியங்கள் ஞானத்தினாலடக்கப்படுவதுபோல விஷயசந்நிதானத்தை நீக்குவதால் அடக்கவரிது.

கூஎ வேதமோதுவது தானங்கொடுப்பது எக்கியங்களைச் செய்வது அநுஷ்டானங்களை நடத்துவது தவஞ்செய்வது இவைகளெல்லாம் விஷயசம்பந்தப்பட்ட மனதையுடையவனுக்கு பலனைக் கொடுப்பதில்லை.

கூஅ எவன் இஷ்டாநிஷ்டங்களை காதினாற்கேட்டும் மெய்யினாற்றொட்டும் கண்ணாற்பார்த்தும், நாவினாற்புசித்தும், மூக்கினால்மோந்தும், சுகத்தையுந் துக்கத்தையு மடையவில்லையோ அவனே ஜிதேந்திரியன்.

கூகூ. இந்திரியங்களுக்குள் யாதாமொன்று சுவாதீனப்படாமற்போனால் கியானமானது அதன்வழியாக இல்லிக்குடத்திற் சலம்போல சிறுகச்சிறுகப்போய்விடும்.

